REGD. No. TN/MS (C) 344 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 * 4 பக்கம் விலை 30 காசு



தொழில் வளம்

தொழிலாளர்களின் உரிமைகளையும், நலன்களையும் எவ்வளவுக்கெவ்வளவு பாதுகாக்கின்றோமோ அந்த அளவிற்குத் தொழில்வளம் பெருகும்.

- பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

நீதி

உயர்தரமான நீதியே உன்னதமான அனுகூலம்.

- அண்ணல் காந்தி.



மலர்: 2 (★) சென்னை 12—10—1978 வியாழன் (❋) (★) (❋) (★) (❋) வெளியூர் 13—10—1978 வெள்ளி (❋) இதழ்: 349

மதுரை மாநகரில்

# அரசு நடத்தும் பெரியார் விழா

## சிறப்புமிகு ஏற்பாடுகள்- புரட்சித்தலைவர் பங்கேற்பு

மதுரை, அக். 12- தமிழக அரசு சார்பில் தந்தை பெரியாரின் நூற்றுண்டு விழா இம்மாதம் 21, 22 ஆகிய இரு நாட்களிலும் மதுரை தமுக்கம் மைதானத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படும். முதல்வர் புரட்சித் தலைவர் விழாவில் கலந்து கொள்கிருர்.

மதுரையில் பெரியார் விழாவுக்கான ஏற்பாடுகளை பெரியார் நூற்றுண்டுவிழா மத்தியக்குழுவும் மதுரை மாவட்ட விழாக்குழுவும் தீவிரமாக செய்துவருகின்றன.

ஈரோடு நகரில் கடந்த மாதம் 17,18 ஆகிய தேதிகளில் பெரியார் நூற்றுண்டு துவக்கவிழா கொண்டாடப்பட்டது. அதை அடுத்து ஒவ்வொரு மாதமும் ஒரு மாவட்டத்தின் தலைநகரில் பெரியார் நூற்றுண்டு விழாவினை அரசு கொண்டாடும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்தபடி இம்மாதம் மதுரை மாவட்டத்தில் மதுரை மாநகரில் விழா எடுக்கப்படுகிறது

விழா நடைபெற உள்ள தமுக்கம் மைதானத்தில் மாபெரும் மேடை ஏற்படுத்த ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

தோரண வாயில்களும் மாநகர முக்கியப் பகுதிகளில் அலங்கார வளைவுகளும் நிறுவப்படுகின்றன

பெரியார் வாழ்க்கையைச் சித்தரிக்கும் புகைப்படக் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது

கேரளமாநில ஆளுநர் ஜோதிவெங்கடாசலம் முதல்வர் புரட்சித்தலைவர் தமிழக அமைச்சர்கள் அறிஞர்கள் கவிஞர்கள், அரசியல் தலைவர்கள் முதலிய பல துறையாளர்கள் இருநாள் விழாவிலும் பங்கேற்று கருத்துரை வழங்குவார்கள்

### நாஞ்சிலார்

21 ஆம் தேதி மாலை 4 மணிக்கு நாதசுர இசையுடன் விழா துவங்கும் 5 மணிக்கு மதுரை மேயர் முத்து வரவேற்புரை வழங்க நிதியமைச்சர் நாஞ்சிலார் தொடக்க விழா சொற்பொழிவை நிகழ்த்துவார்

மதுரை காமராஜ் பல்கலைக்கழகத் துணைவேந்தர் குழந்தைசாமி தலைமையில் அறிஞர்கள் பலர் கலந்து கொள்ளும் கருத்தரங்கு நடைபெறும்.

இரவு 8 மணிக்கு சென்னை சைதாப்பேட்டை நரிக்குறவர் பள்ளி மாணவர் நடன நிகழ்ச்சியும், சி எஸ் பாண்டியன் குழுவினரின் சிந்தனர் கலைநிகழ்ச்சியும் நடைபெறும்

22-ம் தேதி ஞாயிறு காலை 9 மணிக்கு 2-வது நாள் விழா துவங்கும்.

வளர்மதி வரவேற்புரை வழங்க சமூகநலத்துறை அமைச்சர் பி டி. சரஸ்வதி

(2-ம் பக்கம் பார்க்க)

ஜானகி ராமச்சந்திரன் கலாலயத்தை நிதியமைச்சர் நாஞ்சிலார் துவக்கி வைத்தார் அமைச்சர் அரங்கநாயகமும் விழாவில் கலந்துகொண்டார்.



வடபழனியில் உள்ள எம். ஜி. ஆர். உயர்நிலைப்பள்ளி துவக்கவிழாவில் நிதியமைச்சர் நாஞ்சிலார், அமைச்சர்கள் ஆர். எம் வீ, அரங்கநாயகம், சுப்புலட்சுமி

# அரசியல் காழ்ப்பால் தொழிலாளரை ஏய்க்கும் தொழிற்சங்க தலைவர்கள்

## வை. பெருமாள் குற்றச்சாட்டு

சென்னை, அக். 12- அரசியல் காழ்ப்பு உணர்ச்சி காரணமாக தொழிலாளர்களை ஏமாற்றி பலிஆடு ஆக்கும் தலைவர்கள் விஷயத்தில் தொழிலாளர்கள் கவனமாக இருக்கும்படி அண்ணா தொழிற்சங்கப் பேரவை பொதுச் செயலாளர் வை. பெருமாள் கேட்டுக் கொண்டார்.

வை. பெருமாள் விடுத்துள்ள அறிக்கைவருமாறு:

போனஸ் பிரச்சினைபற்றி பரிசீலிப்பதாக தொழிலாளர் துறை ஆணையர் உறுதியளித்திருப்பதால் வேலை நிறுத்தம் திரும்பப் பெறப்படுகிறது என பல்லவன் போக்குவரத்துக் கழக தொழிற் சங்க போராட்டக் குழுத் தலைவர்கள் அறிக்கை விட்டிருக்கிருர்கள்

பல்லவன் போக்குவரத்துக்கழகத்தில் திடீர் என்று எந்தவித முன்னறிவிப்பும் இல்லாமல் 7-10-78 ஆம் நாள் மாலை வேலை நிறுத்தம் ஆரம்பித்தார்கள். ஆனல் 9 ஆம் தேதி மாலைக்குள் எல்லா பஸ்களும் ஓட ஆரம்பித்து விட்டன. 31-3-78 கணக்கு ஆண்டில் பல்லவன் போக்குவரத்துக் கழகத்திற்கு ஏற்பட்ட நட்டம் ரூ. 2.83 கோடி என்பது ஊதிய உயர்வு பேச்சுவார்த்தை நடத்தும்போதே எடுத்துக் கூறப்பட்ட ஒன்ருகும்.

அதனல் குறைந்த பட்ச போனஸ் 8.33 சதவீதம் தான் கிடைக்கும் என்றும், அதற்குமேல் கிடைக்காது என்றும் நம்பிய தொழிலாளர்கள் தங்கள் தலைவர்கள் பேச்சை நம்பாமல் வேலைக்குச் சென்று விட்டார்கள்.

தங்களுடைய கவுரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் நோக்கத்தோடு போராட்டக்குழுத் தலைவர்களில் இருவர் எல்லா பஸ்களும் ஓடிய நாளான 9-10-78 ஆம் தேதி மாலை தொழிலாளர் துறை ஆணையர் அவர்களை சந்தித்து ஒரு கடிதத்தை போனஸ் பற்றி கொடுத்து தொழில் தகராறு எழுப்பியிருக்கிருேம் என்று கூறியிருக்கிருர்கள்.

அதை பெற்றுக்கொண்ட தொழிலாளர் துறை ஆணையர், தொழில் தகராறு முறையாக எழுப்பப்பட்டிருக்கிறதா என்பதை பரிசீலிப்பதாககூறியிருக்கிருர். அதுவரையில் எந்தத் தொழில்தகராறும் எழுப்

(2-ம் பக்கம் பார்க்க)

## சிக்மகளூர் தேர்தலில் இந்திராவுக்கு ஆதரவு

# புரட்சித்தலைவர் சிறப்பு பேட்டி

சென்னை, அக். 12- சிக்மகளூர் இடைத் தேர்தலில் இந்திராகாந்தியை ஆதரிக்க கருநாடக மாநில அனைத்திந்திய அண்ணா தி. மு கழகம் தீர்மானித்துள்ளது.

கருநாடக மாநில அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக செயற்குழு கூட்டம் பெங்களூரில் நடந்தது. முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் நடந்த இக்கூட்டத்தில் கருநாடக மாநிலம் சிக்மகளூர் நாடாளுமன்ற தொகுதி இடைத் தேர்தல் குறித்து ஆலோசிக்கப்பட்டது.

இத்தேர்தலில் இந்திரா காங்கிரசுக்கு கழகம் ஆதரவளிக்க முடிவு எடுக்கப்பட்டது.

கருநாடக மாநில கழக அமைப்பாளர் சம்பங்கி ராமையா விடுத்துள்ள அறிக்கையில் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்தின் கொள்கைகளை நிறைவேற்ற இந்திராகாங்கிரஸ் அளிக்கும் ஆதரவு ஒத்துழைப்பைத் தொடர்ந்து செயற்குழு இவ்வாறு முடிவு எடுத்துள்ளது" என்று குறிப்பிட்டுள்ளார்

### புரட்சித் தலைவர் பேட்டி

பெங்களூரிலிருந்து சென்னை திரும்பிய முதல்வர் புரட்சித்தலைவர் பி. டி. ஐ. செய்தி நிறுவனத்துக்கு அளித்த சிறப்புப் பேட்டியில் "சிக்மகளூர் இடைத் தேர்தலில் இந்திரா காந்தியை கழகம் ஆதரிக்கும்" என்பதைத் தெரிவித்தார்.

சிக்மகளூர் தொகுதியில் பிரச்சாரத்தில் கழகம் பங்கேற்கும் முறைகள் குறித்து பின்னர் முடிவு எடுக்கப்படும் என்றும் புரட்சித் தலைவர் கூறினர்.

### தீர்மான விவரம்

கருநாடக மாநில அனைத்திந்திய அண்ணா தி மு கழகம் நிறைவேற்றிய தீர்மானத்தில் "கருநாடகத்தில் தேவராஜ் அர்ஸ் தலைமையிலான காங்கிரஸ் உடன் கழகம் தேர்தல் உறவு கொண்டு அந்த கட்சிக்கு ஆதரவுகொடுக்கும்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### அமைச்சரவை கூட்டம்

தமிழக அமைச்சரவைக் கூட்டம் தலைமைச் செயலகத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் இன்று நடந்தது.

இதில் அமைச்சர்களும் அரசு தலைமைச்செயலாளர் வி கார்த்திகேயன், நிதித் துறை செயலாளர் வெங்கடேசன், ஆகியோரும் கலந்து கொண்டனர்

# பட்டாசு வெடித்து மாணவர் 2 பேர் படுகாயம்

சென்னை, அக் 12- பழைய பட்டாசு வெய்யிலில் காயவைத்தது வெடித்து மாணவர் இருவரின் முகம் வெந்துவிட்டது.

மயிலையில் பிரித்தம்சந்த் என்ற மார்வாடியின் மகன் விஜயகுமார் (வயது 17) தனது வீட்டில் நண்பர் பார்த்திபனுடன் (வயது 17) பழைய பட்டாசை மூன்ருவது மாடியில் வெய்யிலில் காயவைத்துக் கொண்டிருந்தார். வெய்யில் சூட்டினல் பட்டாசு வெடித்து விபத்து ஏற்பட்டது. இருவருடைய கண்களும் தெரியவில்லை, முகம் வெந்து, உதடு கிழிந்து விட்டது

போலீசார் விரைந்து சென்று அவர்களை ராயப்பேட்டை மருத்துவமனையில் சேர்த்தனர். அவர்கள் நிலை கவலைக்கிடமாகஇருக்கிறது.

# மருத்துவமனையில் பெரியவர்: புரட்சித்தலைவர் சென்று பார்த்தார்

சென்னை, அக். 12-பெரியவர் எம்.ஜி. சக்ரபாணி நெஞ்சுவலி காரணமாக சிகிச்சைக்காக மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார். அவரை முதல்வர் புரட்சித்தலைவர், நிதியமைச்சர் நாஞ்சிலார் ஆகியோர் சென்று பார்த்தனர்.

பெரியவருக்கு கடந்த செவ்வாயன்று இரவு திடீரென்று நெஞ்சுவலிஏற்பட்டது. உடனடியாக தனியார் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டார்.

டாக்டர்கள் தீவிர சிகிச்சை அளித்தார்கள். பெரியவரின் உடல் நிலை தேறிவருகிறது.

தகவல் கிடைத்ததும் முதல்வர் புரட்சித் தலைவர் விரைந்து சென்று பெரியவரைப்பார்த்தார். சிகிச்சை முறைகள் குறித்து மருத்துவர்களிடம் கேட்டறிந்தார். புரட்சித் தலைவரின் துணைவியார் ஜானகி அம்மையாரும் புரட்சித் தலைவருடன் வந்து பெரியவரைப் பார்த்தார்.

நிதியமைச்சர் நாஞ்சிலார், அமைச்சர்கள் கே.ஏ. கே. ராஜா முகமது, ஆகியோரும் சென்று பார்த்தனர்.

"பெரியவருக்கு பூரண ஓய்வுதேவை. யாரும் தொந்தரவு செய்யக் கூடாது" என்று மருத்துவர்கள் கூறியிருக்கிருர்கள்.

## தி.மு.க. பொய் செய்திக்கு மறுப்பு

தேவகோட்டை, அக்12 - தேவகோட்டைக்கு கடந்த 20-ந்தேதி கருணாநிதி வந்த போது நெய்யானேந்தல் என்ற ஊரில் கழகத்தைச் சேர்ந்த 25பேர் திமுக வில் சேர்ந்தார்கள் என்ற செய்தி தவறானது என்று திருவாடானைதொகுதி கழக அமைப்பாளர். அங்கு சாமி கூறியுள்ளார்.

அப்படி நெய்யனேந்தல் என்றஊரே திருவாடானை தொகுதியில் இல்லை என்றும் இந்த பித்தலாட்டச்செய்தியை வன்மையாக கண்டிக்கிறோம் என்றும் அவர் கூறியுள்ளார்.

எம்.ஜி.ஆர். உயர்நிலைப்பள்ளியில் ஜானகி ராமச்சந்திரன் சிறுவர் பள்ளி தொடக்க விழாவில் அமைச்சர்கள் நாஞ்சிலார், ஆர். எம். வீ., அரங்கநாயகம், சுப்புலட்சுமி

கருணாநிதி ஆட்சியில் நடந்த அத்துமீறல்

# காவல் நிலையத்தில் அடித்து கொன்று எரித்த கொடுமை

சென்னை, அக். 12- மதுரை மாவட்டம் சத்திரப் பட்டியைச் சேர்ந்த சுப்பிரமணிய பண்டிதர் என்பவரை காவல் துறையினர் அழைத்துச் சென்று அடித்துக் கொன்று அவர் உடலை எரித்தனர்.

சுப்பிரமணிய பண்டிதரின் மனைவி தெய்வயானை புகார் கொடுத்து இருந்தார். நீதிபதி கிருஷ்ணசாமிநாயுடு கமிஷன் முன்பு இந்த விசாரணை நடைபெற்றது.

தெய்வயானையின் கணவர் சுப்பிரமணிய பண்டிதரை காவல்துறை சப்-இன்ஸ்பெக்டர் பிரிட்டோ, தலைமைக்காவலர் ஸ்ரீதரன் ஆகியோர் அடித்ததை தான் நேரில் பார்த்ததாக கமிஷன் முன் சாட்சியம் அளித்த வேலாயுதம் கூறினார்.

அவர் மேலும் கூறியதாவது:

### கைத் துப்பாக்கி

செல்லமுத்து என்பவர் ஒரு கைத்துப்பாக்கியை வாங்கி வரும்படிஎன்னிடம் கூறினார். நான் சுப்பிரமணிய பண்டிதரிடம் இருந்து ஒரு கைத்துப்பாக்கியை வாங்கி செல்லமுத்துவிடம்கொடுத்தேன்.

இதுகுறித்து போலீசார் அவரிடம் விசாரணை செய்தனர். சுப்பிரமணிய பண்டிதரிடம் இருந்த துப்பாக்கியை கொடுத்த விவரத்தைதெரிவித்தேன்.

சுப்பிரமணிய பண்டிதரை காவல் நிலையத்துக்கு அழைத்து வரும்படி போலீசார் என்னிடம் கூறியதால் அவரை நான் காவல் நிலையத்திற்குகூட்டி வந்தேன்.

### அடி- உதை

சுப்பிரமணியத்திடம் போலீசார் விசாரணைசெய்தனர். தலைமைக் காவலர் ஸ்ரீதரன் சுப்பிரமணியத்தின் வயிற்றில் எட்டி உதைத்தார்.

சுப்பிரமணியம் கீழே விழுந்துவிட்டார் அவருடைய கழுத்தில்சப்-இன்ஸ்பெக்டர் பிரிட்டோ ஒரு லத்திக் கம்பால் அடித்தார்.

சுப்பிரமணியத்தின்வாயிலும், மூக்கிலும்ரத்தம் வந்தது. மயங்கிக் கிடந்த அவரை சில காவலர்கள் காவல் நிலையத்துக்குள் தூக்கிச் சென்றனர்.

என்னை போலீசார் லாக்கப்பில் அடைத்தனர் அடுத்தநாள் என்னை வேறு ஒரு காவல்நிலையத்துக்குக் கொண்டுசென்றனர்.

முதல்நாள் இரவே சுப்பிரமணிய பண்டிதர் இறந்துவிட்டார் என்பதை நான் தெரிந்து கொண்டேன்.

சுப்பிரமணியத்தை அடித்ததைப் பார்த்த என் மீது ஒரு திருட்டு வழக்குப் போட்டு விட்டனர். எனக்கு 6 மாத சிறைத் தண்டனை கிடைத்தது. எனக்குத் தெரிந்த விவரங்களை கமிஷனுக்கு எழுதி அனுப்பினேன். இவ்வாறு வேலாயுதம் கூறினார்.

அடுத்து பழனி தேவஸ்தான முடி திருத்துவோர் சங்கத்தின் செயலாளர் ஆசிரியப்பன் சாட்சியம் அளித்தார். அவர் கூறியதாவது:

சுப்பிரமணியபண்டிதரை காவல்நிலையத்துக்கு அழைத்துச் சென்ற விபரத்தை அவரது மனைவியும் மகனும் என்னிடம் தெரிவித்தனர்.

அவர்களுடன் காவல் நிலையத்திற்குச் சென்று விசாரித்தேன். மாலை 4 மணிக்கு வந்தால் பார்க்கலாம் என்றுசொன்னார்கள்.

மாலை 4 மணிக்குப்போய் கேட்டோம் 10 நாள் கழித்து வந்தால் பார்க்கலாம் என்று கூறினார்கள்.

போலீசார் அவரை அடித்துக் கொன்று விட்டதாக அன்றேபொது மக்கள் பேசிக்கொண்டார்கள். சில நாட்கள் கழித்து நண்ணுசுப்பிரமணியனை அழைத்து இந்த விஷயத்தை தெரிவித்தேன் என்று சொன்னார். இவ்வாறு ஆசிரியப்பன் கூறினார்.

### எரித்த கொடுமை

சுப்பிரமணிய பண்டிதரை போலீசார் அடித்துக் கொன்றுவிட்டு அவரது உடலை வேட்டைக்காரன்புதூர் அருகில் ஒரு தோப்பில் வைத்து எரித்து விட்டார்கள் என்று பழனி மருத்துவமனையில் வேலை பார்க்கும் காளிமுத்து சாட்சியம் அளிக்கையில் கூறினார்.

இந்தப் புகார் மீதான விசாரணை 26-ம் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது.

# சரண்சிங்குக்கு மீண்டும் மந்திரி பதவி தர ஏற்பாடு

புதுடெல்லி, அக். 12 - முன்னாள் உள்துறை அமைச்சர் சரண்சிங்குக்கு மீண்டும் அமைச்சர் பதவி கொடுக்க முயற்சிகள் நடந்து வருகின்றன.

பிரதமர் மொரார்ஜி தேசாய் குஜராத் சென்றுள்ளார் அங்கு 8நாட்கள் தங்கியிருந்து பல்வேறு நிர்வாகப்பிரச்சினைகள்குறித்து முடிவு எடுக்கஇருக்கின்றார்.

புதிய அமைச்சர்கள் நியமனம் பற்றியும் பிரதமர் முடிவு எடுக்க இருக்கிறார்.

சமீபத்தில் நடந்த ஜனதா பார்லிமெண்டரி கட்சி கூட்டத்தில் மொரார்ஜிக்கு ஆதரவு அதிகரித்திருப்பது தெரிய வந்தது

சரண்சிங்கோஷ்டியையும் திருப்திப்படுத்தும் வகையில் சரண்சிங்கை அமைச்சராக்க வேண்டும் என்று பிரதமருக்கு நெருங்கிய வட்டாரத்தினர் வற்புறுத்தி வருவதாகத் தெரிகிறது.

அதன்படி சரண்சிங்குக்கு அமைச்சர் பதவி கொடுக்க பிரதமர் தேசாய் முன் வந்திருப்பதாகக் கூறப்படுகிறது

ஆனால் முன்பு சரண்சிங் வகித்துவந்த முக்கியமான இலாகாவான உள்துறை இலாகாவை மீண்டும் அவருக்குக் கொடுக்க பிரதமர் விரும்பவில்லை.

உள்துறைஇலாகா தவிர சரண்சிங் தனக்கு விருப்பமான எந்த இலாகாவையும் எடுத்துக் கொள்ளட்டும் என்று பிரதமர் கூறி வருவதாகத் தெரிகிறது.

உள்துறை இலாகா கிடைக்காவிட்டால்அமைச்சர்பதவி ஏற்கசரண்சிங்ஒப்புக்கொள்வாரா என்பதும் கேள்விக்குறியாகவே உள்ளது.

இரு கோஷ்டியையும் திருப்திப்படுத்திசுமுகமான முடிவு ஏற்பட நடுநிலையாளர்கள்தொடர்ந்து முயன்றுவருகிறார்கள்.

அக்டோபர் 19ந்தேதிக்குப் பிறகு மத்திய அமைச்சரவையில் மாற்றம் ஏற்படும் என்று தெரிகிறது

## வை. பெருமாள் குற்றச்சாட்டு

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

படவில்லை என்பதுகுறிப்பிடத்தக்கது.

ஒரு தொழில் தகராறு எழுப்ப வேண்டுமென்றால் சங்கத்தின் சட்டவிதிகளில் கூறியுள்ளபடி முன்னறிவிப்பு கொடுத்து பொதுக்குழு கூட்டவேண்டும்.

கூட்டத்திற்கு வரவேண்டிய உறுப்பினர்கள் குறைந்தவரம்பு (கோரம்) வந்திருக்கவேண்டும். அப்படி வந்தவர்கள் பெரும்பான்மையார் வேலை நிறுத்தத்திற்கு ஆதரவு தந்திருக்கவேண்டும், அல்லது தொழில் தகராறு எழுப்ப ஆதரவு தந்திருக்க வேண்டும்.

மேற்கண்ட வகையில் தொழில் தகராறு எழுப்பப்பட்டிருக்கின்றதா என்பதைத் தான் தொழிலாளர் துறை ஆணையர் பரிசீலிப்பதாக சொல்லியிருக்கிறாரே ஒழிய போனஸ் பிரச்னையில் நான் தலையிடுகிறேன் என்று சொல்லவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. அதைத் தமது அறிக்கையிலும் தொழிலாளர் துறை ஆணையர் தெளிவு படுத்தியிருக்கிறார்.

தொழில்தகராறு முறையாக எழுப்பப்படவில்லை என்பது அனைவரும் அறிந்த உண்மையாகும் ஆகவே தொழிலாளர்துறை ஆணையர் தலையீடு என்பது இங்கு எழவில்லை.

சில தொழிற்சங்கத் தலைவர்கள் அரசியல் காழ்ப்புணர்ச்சிகளைத் தீர்த்துக் கொள்வதற்காகபோராட்ட வெறியோடு தொழிலாளர்களைத் தூண்டிவிட்டு தங்களுடைய தாகத்தைத் தணித்துக் கொள்வதிலே இனி யாவது ஆர்வம் காட்டமாட்டார்கள் என்று நம்புவோமாக.

இம்மாதிரியான முறையற்ற செயல்களில் தொழிலாளர்களை ஈடுபடுத்தாதிருக்கும்படியும்போராட்டக் குழுத்தலைவர்களையும் அவர்களுடைய முறையற்ற செயல்களுக்கு தொழிலாளர்கள் தொடர்ந்து பலியாக வேண்டாம் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு அண்ணா தொழிற் சங்கப் பேரவை பொதுச்செயலாளர் வை. பெருமாள் தமது அறிக்கையில் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

திருச்செங்கோடு

## புள்ளிகார் ஆலை திறப்பு: அரசு முயற்சி வெற்றி

சென்னை, அக், 12- சேலம் மாவட்டம் திருச்செங்கோட்டில்உள்ளபுள்ளிகார் மில்தொழிலாளர்கள் கடந்த 40 நாட்களாக வேலை நிறுத்தம் செய்து வந்தனர், தொழிலாளர் பிரச்சினையைத்தீர்க்கஅரசு முழு முயற்சிகளை மேற்கொண்டது அதன்படி தொழிலாளர்துறைசிறப்பு துணைகமிஷனர் எஸ்ராஜா சுப்பிரமணியம் முன்னிலையில்உடன்பாடு ஏற்பட்டது டிஸ்மிஸ் செய்யப்பட்ட 10 ஊழியர்கள் மீண்டும் வேலைக்கு சேர்த்துக் கொள்ளப்பட்டனர் 18 தொழிலாளர்கள் மீதான ஒழுங்கு நடவடிக்கை ரத்துச் செய்யப்பட்டது

புள்ளிகார் ஆலை தற்போது திறக்கப்பட்டுவேலைகள்நடந்து வருகின்றன

## அரசு நடத்தும் பெரியார் விழா..

(1-ம் பக்க தொடர்ச்சி)

தலைமையில் மகளிர் அரங்கம் நடைபெறும்

11 மணிக்கு நெதுசுந்தர வடிவேலு துவக்கஉரை நிகழ்த்த புலவர் புலமைப்பித்தன் எம்எல்சி தலைமையில் கவியரங்கம் நடைபெறும்

மாலை 4 மணிக்கு பெரியார் வாழ்க்கையை சித்தரிக்கும் கருத்து விளக்க அலங்கார வண்டிகளுடன் என் சி சி சாரணர், ஊர்க்காவல் படையினர், மகளிர் ஆகியோரின் சிறப்பு அணிவகுப்பு ஊர்வலம் மதுரைக் கல்லூரித் திடலிலிருந்து புறப்பட்டு தமுக்கம் திடலை அடையும்.

மாலை 6 மணிக்கு "மந்திரமா? தந்திரமா?" என்ற உண்மை விளக்கத் தந்திரக் காட்சிகள் நடைபெறும்

பிறகு சிறப்புச் சொற்பொழிவுநிகழ்ச்சி தொடங்கும்.

உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து வரவேற்புரை நிகழ்த்துவார்.

டாக்டர்நாவலர்தலைமை வகிப்பார். செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர் எம் வீ துவக்க உரை நிகழ்த்துவார்.

கேரள ஆளுநர் ஜோதி வெங்கடாசலம் தந்தை பெரியாரின் உருவப்படத்தைத் திறந்து வைத்துப் பேசுவார்.

முதல்வர் புரட்சித் தலைவர் விழா நிறைவுச் சொற்பொழிவை நிகழ்த்துவார்.

பின்னர் அமைச்சர் சவுந்தரபாண்டியன் தலைமையில் கே பி ராஜ்மோகன் குழுவினரின் "பெரியார் ஒரு சகாப்தம்" எனும் நாடகம் நடைபெறும்.

இந்தித் திணிப்புக்கு கடும் எதிர்ப்பு:

# புரட்சித்தலைவர் கருத்துக்கு ஆந்திர முதல்வர் ஆதரவு

ஹைதராபாத், அக் 12— இந்தித் திணிப்புக்கு எதிர்ப்புத் தெரிவித்து, தமிழக முதல்வர், அது மத்திய அரசின் ஆட்சி மொழியாகக் கூடாது என்று வற்புறுத்தியுள்ளார் அதைத் தான் நானும் சொல்கிறேன் என்று ஆந்திர முதலமைச்சர் சென்னாரெட்டி கூறினார்

தென்மாநிலங்களின் மீது இந்தியைத் திணித்தால், அதைக்கடுமையாக எதிர்ப்போம் என்றும் அவர் கூறினார்.

ஹைதராபாத்தில் நடந்த தென்பகுதி இந்தி பிரச்சாரசபை கூட்டத்தில் கலந்து கொண்டு முதலமைச்சர் சென்னாரெட்டி கூறியதாவது:

இந்தியை ஆட்சிமொழியாக மத்திய அரசு ஆக்கக்கூடாது இதனால் மற்ற மாநில மக்கள் மிகவும் பாதிக்கப்படுவார்கள்.

இந்தி பேசாத மக்கள் மீது அதைக் கட்டாயப்படுத்தி திணிக்க மத்திய அரசு முயலக்கூடாது. இந்தியைத் திணித்தால் அதைக் கடுமையாகஎதிர்ப்போம்

இந்திமொழி மீது தென் மாநிலங்களுக்குக் கோபம் எதுவும் இல்லை அதுவும்வளரட்டும் இதற்கு யாரும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை ஆனால், அது ஆட்சிமொழி ஆவதைத் தான் தென் மாநிலங்கள் எதிர்க்கின்றன. இந்தி பேசாதவர்கள் விரும்பும் வரை இந்தித் திணிப்பு என்ற பேச்சையே எடுக்கக் கூடாது

### புரட்சித் தலைவர் கருத்து

அண்மையில் தமிழக முதலமைச்சர் தனது கருத்தை வெளியிட்டார், அவரும்கூட தனிப்பட்ட முறையில் இந்திமொழியை எதிர்க்கவில்லை

அது மத்திய அரசின் ஆட்சிமொழியாகக்கூடாது என்றுதான்வற்புறுத்தியுள்ளார் அதைத்தான்நானும் சொல்கிறேன்

இந்த எதிர்ப்புகளையும் மீறி கட்டாயமாக "இந்தி ஆட்சிமொழியாக ஆக்கப்படுமானால் இந்தி பேசாத மாநிலங்கள்மீது இந்தித் திணிக்கப்படுமானால் அதனால் ஏற்படும் விளைவுகளை சந்திக்க மத்திய அரசு தயாராக இருக்கவேண்டும்

இவ்வாறு ஆந்திரமுதல்வர் சென்னாரெட்டி கூறினார்,

### பஞ்சாப் அமைச்சர் டிஸ்மிஸ்

சண்டிகார், அக் 12- பஞ்சாப் கல்வி அமைச்சர் சுக்ஜிந்தர்சிங் பதவியிலிருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்டார்.

நேற்று இரவு 9 மணிக்குள் பதவியை ராஜினாமா செய்யுமாறு முதல்வர் பாதல் அவரைக் கேட்டுக் கொண்டார். சுக்ஜிந்தர்சிங் ராஜினாமாச் செய்யாததால், கவர்னரைமுதல்வர் சந்தித்து அவரை டிஸ்மிஸ் செய்யுமாறு கேட்டுக் கொண்டார். அதன்படி சிங்கை அமைச்சர் பதவியிலிருந்து கவர்னர் நீக்கினார் கல்வி அமைச்சர் சிங் மீது ஏராளமான ஊழல் புகார்கள் இருப்பதாகவும் பூர்வாங்க விசாரணையில் அவற்றிற்குஆதாரம் இருப்பதாகவும் முதல்வர் கூறினார்

திருப்பூர்

## அண்ணா சலவை தொழிலாளர் சங்க நிர்வாகிகள்

திருப்பூர், அக். 12- திருப்பூர்தொகுதி அண்ணா சலவைத் தொழிலாளர் சங்க பொது உறுப்பினர்கள் கூட்டம் ஏ. கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில்மணிமாறன் எம்.எல்.ஏ., முகவை கண்ணன், சுப்பிரமணியம், கோபாலகிருஷ்ணன், பழனிசாமி, கங்காதரன் ஆகியோர்கலந்துகொண்டனர்.

அப்போது சங்க நிர்வாகிகள் தேர்வு நடைபெற்றது.

தலைவராக கே. திலகமணி, துணைத் தலைவராக ஆர். ஆறுமுகம், செயலாளராக எம். ரங்கசாமி, துணைச் செயலாளராக கே எஸ் அங்கப்பன், பொருளாளராக கே. நாச்சிமுத்து ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை. சென்னை 600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி.தங்கராஜன். நவசக்தி அச்சகம், கச்சேரிசாலை, சென்னை 600004.
ஆசிரியர்: எம்.ஜி. சக்ரபாணி

# பொய்ச் செய்திக்கு நாஞ்சில் வின்சென்ட் மறுப்பு அறிக்கை

சென்னை, அக். 12-நாகர்கோவில் மாவட்ட ஆட்சித்தலைவரின் அலுவலக ஊழியரை மிரட்டியதாக முரசொலியில் வந்துள்ள பொய்ச்செய்திக்குநாஞ்சில் வின்சென்ட் மறுப்பு தெரிவித்துள்ளார்.

அது பற்றி அமைச்சகச் செயலர் நாஞ்சில் வின்சென்ட் கூறியிருப்பதாவது:

நான் நாகர்கோவில் செல்லும் போதெல்லாம் மக்கள் என்னை சந்திக்க வசதியாக பொதுப்பணித்துறை பயணியர்விடுதியில் தங்குவது வழக்கம்.

கடந்த 5-ம் தேதி நான் அங்கு செல்லும்போது இன்னும் இரண்டு மணி நேரத்தில் அறை காலியாகிவிடுமென்றும் அதுவரைவடசேரிபயணியர்விடுதியில்தங்கும்படியும் சொன்னார்கள். அதன்படி நான் நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டு 6-ந் தேதி காலை பொதுப்பணித்துறைபயணியர் விடுதியில் வந்து தங்கினேன் ஒரு அறையில் நானும் மற்றொரு அறையில் எனது நேர்முக உதவியாளரையும் சிப்பந்தியையும் தங்க வைத்தேன்.

6ந்-தேதிமாலை3மணிக்கு கோபால்சாமி (தி. மு. க. எம். பி.) வருகிறார், ஒரு அறை வேண்டும் என்று கேட்டார்கள், எனது உதவியாளர் அறையை காலி செய்துவிட்டு கொடுத்து விட்டேன்.

மீண்டும் மாலை4மணிக்கு அரிசன நலஇயக்குநர் வருகிறார், ஒரு அறை வேண்டும் என்று விரும்பினர் மாளிகை சிப்பந்தி சுகுமாரனுக்கு தகவல்வந்தது. நாங்கள் தங்கியிருப்பதை சுகுமாரன் சொன்னார்.

என்னை வடசேரி விடுதியில் தங்கும்படி கலெக்டர் அலுவலகத்திலிருந்து தகவல் வந்ததாக சுகுமாரன் சொன்னார்.

உடனே நான் கலெக்டருடன் தொடர்பு கொண்டேன். அவர் தென்காசி போயிருப்பதாகக் கூறினார்கள். அவரது உதவியாளருடன் தொடர்பு கொண்டேன் அவர் இல்லை என்று தகவல் வந்தது சம்பந்தப்பட்ட எழுத்தரை கேட்டதற்கு சுகுமாரன் சொன்னது உண்மை என தெரிந்து கொண்டேன்

கலெக்டரின் நேர்முக உதவியாளர், நாகர்கோவில் ஆர். டி. ஓ. தாசில்தார் ஆகியோரின் ஒப்புதலோடுதான் தங்கியிருந்தேன். பக்கத்தில் இருந்த கோபால்சாமி அரசியல் வஞ்சக எண்ணத்தோடு லாபம் தேட முயன்றார். இது தான் நடந்தது நான் எந்த ஊழியரையும் மிரட்டவில்லை

இவ்வாறு நாஞ்சில் வின்சென்ட் கூறியுள்ளார்.

# தலைமைக்கழக அறிவிப்பு

## மேட்டுப்பாளையம் கழகத் தோழர்களுக்கு

அனைத்திந்திய அண்ணா திமு கழகத்தின் விதிமுறைகளுக்கும், கட்டுப்பாட்டுக்கும் மாறான முறையிலும கழகத்தின் நற்பெயருக்கு கேடு ஏற்படும் முறையிலும் நடந்துகொண்ட காரணத்தால் கோவை மாவட்டம் மேட்டுப்பாளையத்தைச் சேர்ந்த மீனாட்சிசுந்தரம் கழகத்தின் அடிப்படை உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் உடனடியாக நீக்கப்படுகிறார். கழகத் தோழர்கள்—தொழிற்சங்கத் தோழர்கள் யாரும் அவருடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளக் கூடாது என்று அறிவுறுத்தப்படுகிறார்கள். பொதுச்செயலாளர் புரட்சித்தலைவர் அவர்கள் ஒப்புதலுடன் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

கே. ஏ. கிருஷ்ணசாமி
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை,
12 10-78

கழக வளர்ச்சி நிதி நாட்டிய நாடகம் டிசம்பர்25-ல்திருச்சியில் நடைபெறும்

# புரட்சித் தலைவர் அறிவிப்பு

கழக வளர்ச்சி நிதிக்காக திருச்சியில் நடைபெற இருந்த நாட்டிய நாடக நிகழ்ச்சி அப்போது ஏற்பட்ட புயல் வெள்ளம் காரணமாக ஒத்திவைக்கப்பட்டது. மேற்படி நிகழ்ச்சி

**வருகிற டிசம்பர் மாதம் 25-ம் தேதியன்று திருச்சியில் நடைபெறும்**

என்பதைத தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஆகவே கழகத் தோழர்கள் நாட்டிய நாடக நிகழ்ச்சிக்காக பெற்றுச் சென்றுள்ள நன்கொடைச சீட்டுக்களை விற்பனைசெய்து, அடிக்கட்டைகள், விற்பனையாகாத நன்கொடைச் சீட்டுகள், வசூல் தொகை ஆகியவைகளை **1978-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 5-ம் தேதிக்குள் கழகப்பொருளாளரிடம் ஒப்படைக்குமாறு வேண்டுகிறேன்.**

எம். ஜி. ராமச்சந்திரன்
பொதுச்செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை
11-10-78

## ஜெகந்நாதன் எம். பி. கொடிஏற்றினர்

சென்னை அக் 12- சென்னை 114 வது வட்டம் வடபழனியில் உள்ள சைதைத்தெரு சன்னதி தெரு, கவரைத்தெரு அக்பராபாத் தெருக்களில் கழகக் கொடியேற்று விழாவில் நாடாளுமன்ற கழக உறுப்பினர் ஜெகந்நாதன் கலந்துகொண்டு கழகக்கொடி ஏற்றினர் நவரசம் ஜிகே எஸ் பி. ராமலிங்கம், பி ஏ கணபதி ஜெ பாலன், சா கோவிந்தசாமி, சா. துரைசாமி, வ. முனுசாமி, ஏ பி வரதராசன் அய்யாபிள்ளை ஆகியோர் விழாவில் கலந்து கொண்டு பேசினர்.

அரசு நடவடிக்கையால் துணி தேக்கம் இல்லை:

# கைத்தறித் துணி வாங்கி நெசவாளர் துயர் நீக்க சுப்புலட்சுமி கோரிக்கை

சென்னை, அக். 12- "தமிழ்நாடு அரசு தக்க நேரத்தில் சரியான முடிவை எடுத்ததால் பிரதம நிலையங்களில் கைததறி ஆடைகள் தேக்கம் இல்லை என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆடைகளை வாங்கி அணிந்து நெசவாளர்களுக்கு ஒரு வேளை உணவு அளித்தோம் என்ற உணர்வினைப் பெறவேண்டும்" என்று அமைச்சர் சுப்புலட்சுமி கூறினர்.

"பாலியஸ்டர்" கைத்தறி ஆடைகள்வெளியீட்டு விழாவில் தமிழ்நாடு கைத்தறி கதர்தொழில் அமைச்சர் சுப்புலட்சுமி பேசியதாவது:

கைத்தறி ஆடைகள் வயதானவர்கள் அணிவிக்கக்கூடியது என்று இருந்த நிலையைமாற்றி இளைஞர்கள் கல்லூரி மாணவர்கள் எல்லாம விரும்பி அணியக்கூடிய வகையில் சுருக்கம் ஏற்படாத பாலியஸ்டர் கைத்தறி துணிகள் இன்று வெளியிடப்படுகிறது.

தமிழ்நாட்டில்தயாரிக்கப்பட்ட கைத்தறிஆடைகளை வெளிநாட்டில் இருந்த மன்னர் எல்லாம் விரும்பி வாங்கி அணிந்து கொண்டார்கள். என்ற சிறப்பை கைத்தறி பெற்றிருந்தது.

### விளம்பர வாழ்வு

இடையில் மில் துணிகளுக்கு ஏற்பட்ட பரபரப்பான விளம்பரம் மக்களை மில் துணிகள் பக்கம் திருப்பியது. அதனுல் கைத்தறி நெசவாளர்கள் வாடினுர்கள்.

அண்ணா அவர்கள் நெசவாளர்களின் துயரத்தைத் துடைக்க-கைத்தறி ஆடைகளை தோளில் சுமந்து வீதி வீதியாக சென்று விற்று- இந்தத் துறைக்கு ஒரு புது மலர்ச்சியை ஏற்படுத்தினுர்.

அண்ணா அவர்கள்கொண்டிருந்த அதே எண்ணத்தை இன்றைக்கு புரட்சித்தலைவரும் பெற்றிருக்கிறுர், கடந்த ஓராண்டு காலத்தில் இத்துறை பல்வேறு மாறுதல்களைச் செய்திருக்கிறது.

தக்கநேரத்தில் சரியான முடிவை இத்துறையில் எடுத்ததால் பிரதம நிலையங்களில் துணிகள்தேக்கம் இல்லை என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது.

பாலியஸ்டர் கைத்தறி துணிகளை தயாரிக்கும் நிலையங்களை இதர கிளைகளுக்கும் விரிவு படுத்தி செயலிழந்து இருக்கும் நிலையங்களை செயல்படச் செய்ய திட்டமிட்டிருக்கிறேம்.

கைத்தறி ஆடைகளை வாங்குவதன் மூலம் நெசவாளர்களுக்கு ஒரு வேளை உணவு அளிக்கிறேம் என்ற உணர்வினை பெற முடியும். அந்த அளவுக்கு இத்துறையில் தயாரிக்கப்படும் ஆடைகளின் வண்ணம், நேர்த்தி, குறைந்த விலை, மனத்திற்கு நிறைவு ஏற்படுகின்ற வகையில் உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது.

நமது சகோதரர்களைப் போன்ற நெசவாளர்களை வாழ்விக்க நாம் வாங்கும் துணிகளில் குறைந்தபட்சம் 50 சதவிகிதத்தையாவது கைத்தறி ஆடைகளை வாங்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் சுப்புலட்சுமி பேசினுர்.

விழாவுக்கு வந்திருந்தவர்களை கைத்தறித்துறை இயக்குனர்சங்கரசுப்பையா வரவேற்று பேசினுர். விழா முடிவில் துணி அதிகாரி (பொறுப்பு) ஏ. சிதாராமன் நன்றி கூறினுர்.

பாலியஸ்டர்கள் வெளியீட்டுக்குப் பிறகு பல்வேறு ரகமான கைத்தறி ஆடைகளை அணிந்த 14 ஆண்களும் பெண்களும் அணிவகுப்பு ஒன்றை நடத்தினர்.

மருத்துவமனையில்

## அன்புத்தம்பி: அமைச்சர் சவுந்தரராசன் பார்த்தார்

சென்னை, அக்.12- இருதயநோய் காரணமாக சென்னை பொது மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும்நீதியின் குரல் செய்தி ஆசிரியர் சி. வி. அன்புத்தம்பி உடல்நலம் தேறிவருகிறுர்.

மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் திருச்சி சவுந்தரராசன், அனைத்துலக எம்ஜிஆர் மன்ற பொருளாளர்கே.கண்ணன் ஆகியோர் சென்றுபார்த்து உடல்நலம் விசாரித்தனர்.

❋

## படகு கவிழ்ந்து 26 பேர் சாவு

ஜெய்ப்பூர், அக். 12- ராஜஸ்தானில் மதோப்பூர் மாவட்டம் இந்துவான் என்ற இடத்தில் ஜக்கார் அணையில் படகு கவிழ்ந்து 26 பேர் இறந்தனர்.

இறந்தவர்களில் 6 பேர் ஆண்கள், 15 பேர் பெண்கள், 5 பேர் குழந்தைகள்.

மக்கள் ஆதரவுடன் திகழும்

# கழக அரசை எவரும் அசைக்க முடியாது: ஆர். எம். வீ. முழக்கம்

சென்னை, அக் 12- "மக்கள் ஆதரவுடன் திகழும் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்ற கழக அரசை யாராலும் அசைக்க முடியாது" என்று செய்தி, அறநிலையத் துறை அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினர்.

சென்னை 116-வது வட்டக்கிளைக் கழகத்தின் சார்பில் தந்தை பெரியார்- பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழா நடந்தது.

இதையொட்டி மேற்கு மாம்பலம், ஏரிக்கரைத் தெருவிலிருந்து கழக ஊர்வலம் ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. ஊர்வலத்தை வி. ஆர். சுப்பிரமணியம் தலைமையில் அமைச்சர் ஆர். எம். வீ. துவக்கி வைத்தார்.

அமைச்சர் ஆர். எம். வீ. பேசியதாவது:

தந்தை பெரியாரும், பேரறிஞர் அண்ணாவும் தமிழகத்தில் தோன்றிய விடிவெள்ளிகள், இந்திய பூபாகத்தில் தமிழ்நாடும் தமிழ் சமுதாயமும் தலை நிமிர்ந்து வாழ வழி அமைத்த பெருமை இவர்கள் இருவரையுமே சாரும்.

### அண்ணாவின் அரசு

திராவிடர் இயக்கம் தமிழ் சமுதாயத்துக்கு பயன்பட வேண்டுமானல் அது ஆட்சி அமைப்புக்கு வரவேண்டும் என்று அண்ணா விரும்பினுர். அதனுல் தான் அவர் தந்தை பெரியாரிடமிருந்து பிரிந்து வந்து 20 ஆண்டுகாலகாங்கிரஸ் ஆதிக்கத்தைஅகற்றி 1967-ம் ஆண்டு திராவிட இயக்கத்தை ஆட்சியில் அமர்த்தினுர்.

அண்ணாவின் அரசு அன்றைய தினம் தமிழகத்தில் அமைந்திருக்காவிட்டால் இங்கேயும் இன்று இந்தி ஆட்சி செலுத்தியிருக்கும்.

ஜாதி மத பேதங்கள் மற்ற மாநிலங்களில் நிலவுவதைப் போன்று தமிழகத்திலும் இருந்திருக்கும்.

தமிழ் தமிழ் என்று சொல்லும் நாம் ஏடுகளின் மூலம் - இலக்கியங்களின் மூலம் - வரலாறுகளின் மூலம்தான் தமிழின் சிறப்புக்களை அறிந்திருக்க முடியும்.

தவங்கிடந்து பெற்ற அந்தஅரசால்- அண்ணாவின் அரசால் தமிழ் சமுதாயம்- தமிழ்நாடு நற்பயன் பெற்றது.

ஆனுல் இடையிலே வந்தவர்களால் 1976-ம் ஆண்டு திராவிடர் இயக்க அரசு அழிந்துபட்டதை நாம் அறிவோம்.

இதற்குக் காரணம் யார் என்று இந்தநேரத்தில்நான் சொல்லிக்கொள்ள விரும்பவில்லை.

### புரட்சித் தலைவர் சவால்

தந்தைபெரியார், பேரறிஞர் அண்ணாவின்படங்களை அரசு அலுவலகங்களில் இருந்து அகற்றினுர்கள்.

தந்தை பெரியார் பகுத்தறிவு இயக்கம் அண்ணாவின் லட்சியங்கள் இனி காப்பாற்றப்படுமா என்று தமிழகம் எதிர்பார்த்திருந்த நேரத்தில்... திராவிடர் இயக்கம் காப்பாற்றப்படும்- 60 ஆண்டுகால திராவிடர் இயக்கத்தைக் காப்பேன்- திராவிடர் இயக்க அரசை அமைத்தே தீருவேன் என்று புரட்சித் தலைவர் சவால் விட்டார்.

அந்த வகையில் தான் 77-ம் ஆண்டு ஜூன் திங்கள் 30-ம் நாள் அண்ணாவின் அரசினை தமிழகத்தில் ஏற்படுத்தினுர் புரட்சித் தலைவர்.

இந்தஆண்டு பெரியாரின் நூற்றுண்டு விழாவினை அரசு விழாவாக கொண்டாடினேம்,

நாட்டு மக்களின்மனதில் நீங்காஇடம்பெற்றவர்களை நினைவு படுத்தும் வகையில் அகிலம் முழுவதும் தந்தை பெரியாரின்விழாவை நடத்திக் கொண்டு வருகிறுர் முதல்வர் புரட்சித்தலைவர்.

கழக ஆட்சி ஏற்பட்டவுடன் அண்ணா விரும்பிய லட்சியங்களை- பகுத்தறிவுக் கொள்கைகளை அப்படியே நிறைவேற்றி வருகிறுர்.

அந்த வகையில் தான் நமதுகழகம் டன்பிறப்புகள் எழுச்சியோடும் உணர்ச்சியோடும் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணாவின் பிறந்தநாள் விழாக்களை கொண்டாடி வருகின்றனர்.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தை யாராலும் அசைக்க முடியாது. கழகத்

(1-ம் பத்தி பார்க்க)

# அகதிகளுக்கு கூலி உயர்வு தந்தது கழக அரசு தான்

பி. டி. எஸ். பெருமிதம்

கும்மிடிப்பூண்டி, அக். 12—அகதிகளுக்குக் கூலி உயர்வு கொடுத்தது கழக அரசு என்று அமைச்சர் பி. டி. எஸ். கூறினுர்.

கும்மிடிப் பூண்டியில் தாயகம் திரும்பியவர்களுக்காக ரூபாய் 30 லட்சம் செலவில் புதிதாக கட்டப்பட்டுள்ள கனரக மோட்டார்வாகனஓட்டுநர் மற்றும் இயந்திரப் பயிற்சி நிலையத்தை மத்திய மறுவாழ்வுத்துறை அமைச்சர் சிக்கந்தர்பக்த் திறந்து வைத்து பேசினுர். தமிழக சமூக நலத்துறை அமைச்சர் பி டி சரஸ்வதி தலைமை தாங்கினுர். சி.எம். கினி நன்றிகூறினுர்

விழாவில் திருப்பெரும்புதூர் நாடாளுமன்றஉறுப்பினர் எஸ். ஜெகந்நாதன் கும்மிடிப்பூண்டி சட்டமன்ற உறுப்பினர் மூனிரத்தினம், மறுவாழ்வுத்துறை இலாகா செயலாளர் திருமலை, பி கே கந்தசாமி, தய்யம், சந்திரஹாசன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### வருடம் ரூ. 5.5 லட்சம்

இந்த பயிற்சி நிலையத்தில் இலங்கையிலிருந்து தாயகம் திரும்பியோர்116 பேர், பர்மாவிலிருந்து தாயகம் திரும்பியோர் 76 பேர், கிழக்குபாகிஸ்தானிலிருந்து வந்தவர்கள் 24 பேர், கும்மிடிப் பூண்டியைச் சேர்ந்தவர்கள் 38 பேர் பயிற்சி பெறுகின்றனர். இந்தக் கட்டிடங்களின் பராமரிப்பு மற்றும் அனைத்து செலவுகளுக்காகவும் ஆண்டு தோறும் ஐந்தரை லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

விழாவுக்கு தலைமை வகித்து அமைச்சர் பி. டி. சரஸ்வதி பேசும்போது கூறியதாவது:-

தாயகம்திரும்பும் உடன் பிறப்புக்களுக்கு கூடலூர் மாவட்டத்தில் 3 ஆயிரம் ஏக்கர் நிலத்தில் தேயிலை பயிரிட்டு 1500 குடும்பங்களுக்கு வாழ்வு அளித்திருக்கிறேம்.

இதற்கு முன்பு இருந்த அரசு தேயிலைத் தோட்டத்தில் பணிபுரியும் தாயகம் திரும்பியோருக்கு ஒரு நாளைக்கு ரூ 3-70 காசு கூலி அளித்தது கழக அரசு பொறுப்பேற்றபிறகு அதை உயர்த்தி ஒரு நாளைக்கு ரூ 5-50 காசு கூலி அளித்து வருகிறது.

தாயகம்திரும்பியவர்கள் 700 பேர்களுக்குநெய்வேலியில் வேலை அளிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு நெய்வேலியில் 700 குடியிருப்பு அமைக்க மத்திய அரசு உதவ வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பி. டி. சரஸ்வதி கூறினுர்

(8-ம் பத்தித் தொடர்ச்சி)

தோழர்களின் அயராத உழைப்பினல் கழகம் வலிவோடும் பொலிவோடும் இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசினுர்.

### கழகத்தில் இணைந்தனர்

திமுக-ஜனதா கட்சிகளிலிருந்து விலகிய ஆனந்தன் ஆறுமுகம், முகுந்தன், ராமசுப்பன், என்ற தோழர்கள் அமைச்சர்கள் ஆர். எம். வீ. முன்னிலையில் தங்களை கழகத்தில் இணைத்துக் கொண்டனர்.

### ஊர்வலம்

ஒரு டிரக் வண்டியில் தந்தை பெரியார்-பேரறிஞர் அண்ணா படங்கள் அலங்கரித்து வைக்கப்பட்டு ஊர்வலத்தில் கொண்டு செல்லப்பட்டன. சிலம்பாட்டம்பொம்மலாட்டம் பாண்டு வாத்தியங்கள் முழங்க ஊர்வலம் சென்றது.

ஊர்வலத்திற்கு வி. ஆர். சுப்பிரமணியம் தலைமை வகித்தார். சா. கோவிந்தசாமி, தி.நகர் மூர்த்தி, கே, செல்வராஜ், கு. க. செல்வம், ஆர். பட்டாபி ஏ. ஜார்ஜ், ஜெயபால், காசி, பன்னீர் செல்வம் மாம்பலம் முத்து ஆகியோர் உள்பட திரளான கழக மன்றச் செயல் வீரர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

ஏரிக்கரைத் தெருவிலிருந்து புறப்பட்ட ஊர்வலம் ஸ்டேஷன் தெரு, பாபு ராஜேந்திர பிரசாத் தெரு, ஈஸ்வரன்கோவில் தெரு, எல்லையம்மன் கோவில் தெரு, காந்தி தெரு, சுப்பாரெட்டிதெரு, ஆரியக்கவுடர்தெரு, தம்பையாரெட்டி தெரு, உட்பட முக்கிய வீதிகளில் சென்றது. பின்னர்மீண்டும் ஏரிக்கரைத் தெருவிலுள்ள கழகப்பணிமனைக்கு வந்து சேர்ந்தது. திரளான கழக- மன்ற செயல்வீரர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டுசென்றனர்.

பால் உற்பத்தியைப் பெருக்க

# ரூ40கோடியில் புது திட்டம்

## புரட்சித்தலைவர் தீவிர ஆலோசனை: அமைச்சர் ராஜாமுகமது தகவல்

சென்னை, அக். 12- பால் உற்பத்தியைப் பெருக்க ரூ. 40 கோடியில் திட்டம் தீட்டப்படுகிறது. இது குறித்து முதல்வர் புரட்சித் தலைவர் ஆலோசனை நடத்தி வருகிறுர் என்று அமைச்சர் ராஜாமுகமது கூறினுர்.

அமைச்சர் ராஜாமுகமது நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:-

தமிழ்நாட்டில் மேலும் 4 ஆயிரம் பால் உற்பத்தி சங்கங்கள் அமைக்கப்பட இருக்கின்றன.

பால் உற்பத்தியைப் பெருக்க ரூ. 40கோடி செலவில் திட்டம் தீட்டப்படுகிறது. இதன்படி தினசரி 10லட்சம் லிட்டர் கூடுதலாக உற்பத்தியாகி விநியோகிக்கப்படும்.

இத்திட்டம் குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் தேசிய பால்வள வாரிய தலைவர் குரியனுடன் ஆலோசிக்க இருக்கிறுர்.

இத்திட்டத்தால் 8 லட்சம் கிராம மக்கள் பலன் அடைவார்கள்.

சேலத்தில் ரூ. 3,5கோடியிலான பால் பவுடர் உற்பத்தித்தொழிற்சாலை முடியும் தறுவாயில் உள்ளது. இதே போன்ற மற்ளெரு தொழிற்சாலை தருமபுரி மாவட்டம்கிருஷ்ணகிரியில் அமைக்கப்பட இருக்கிறது. இதற்கு ரூ 1 கோடியே 75 லட்சம் செலவிடப்படும்.

வட ஆற்காடு, தென் ஆற்காடு, சேலம், ஈரோடு ஆகிய பகுதிகளிலும் சென்னை அயனாவரத்திலும் மேலும் பால்பவுடர் தொழிற்சாலை தொடங்கப்பட இருக்கின்றன.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினுர்.

### வெளிநாடு பயணம்

அமைச்சர் ராஜாமுகமதுவும்விவசாயத்துறைசிறப்புச் செயலாளர் டி.என். சேஷனும் ஐரோப்பாநாடுகளில் 3 வாரம் சுற்றுப்பயணம் செய்கிறுர்கள்.

ஜெனீவா ஹாம்பர்க், கோபன் ஹேகன். ஸ்டாக் ஹோம், பாரிஸ், லண்டன் ஆகிய நகரங்களுக்குச் சென்றுபால்வளத் திட்டங்களைஅவர்கள் பார்வையிடுவார்கள்.

## ராமபத்திரன் கழகக்கொடி ஏற்றினர்

சென்னை, அக். 12-சென்னை 115-வது வட்டத்தில் நடந்த தந்தை பெரியார்- பேரறிஞர் அண்ணா பிறந்த தின விழாவில் குடிசை மாற்று வாரியத் தலைவர் பி. ராமபத்திரன் கலந்து கொண்டு கழகக்கொடி யேற்றிவைத்தார்.

சா. கோவிந்தசாமி, சைதை சா. துரைசாமி, ஆர் ராமகிருஷ்ணபாபு, ஆர். அலெக்சாண்டர், ஏ. சுப்பையா, வி. சந்திரன், ஆர். சந்திரன், என். ஆர். ஆறுமுகம் என். ஆர். செல்வ ராஜ் பி. கணேசன் மற்றும் பலர் பேசினர்.

❋

தமிழ்நாடு முஸ்லிம்லீக்:

## நிர்வாகிகள் தேர்வு

சென்னை, அக். 12- தமிழ்நாடு முஸ்லிம்லீக் 62 வது வட்டம் (வில்லிவாக்கம்) நிர்வாகிகள் தேர்தல் பொதுச் செயலாளர் கே. பி. செய்குத்தம்பிதலைமையில் நடைபெற்றது.

அபிபுல்லாபெய்க் தமிழ் நாடுமுஸ்லிம்லீக்கொடியை ஏற்றிவைத்தார், தலைவராக முகமது இஸ்மாயிலும் செயலாளராக எஸ். அப்துல் சமுகும், பொருளாளராக ஜாபர் சாதிகும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

75 வது வட்டத்தில் அபிபுல்லாபேக்- செய்குத்தம்பி தலைமையில் கொடியேற்றி வைத்தார்.

## பொய் வதந்தி ஜனுதிபதி கூட்டத்தில் வெடிகுண்டா?

அனந்தபூர், அக்-12, குடியரசுத் தலைவர் சஞ்சீவ ரெட்டி பேச இருக்கும் இடத்தில் வெடி குண்டு இருப்பதாக வதந்தி பரப்பப் பட்டதால் போலீசாருக்கு வேலை கடுமையாக இருந்தது.

தர்மா வரத்தில் பேசுவதற்காக தனிரயிலில் குடியரசுத் தலைவர் சஞ்சீவ ரெட்டி வந்தார். அப்போது கூட்டம் நடைபெற இருக்கும் இடத்தில் நாட்டு வெடி குண்டு இருப்பதாக அநுமதேயக் கடிதம் ஒன்று வந்தது. உடனே பாதுகாப்பு போலீசார் கூட்டம் நடைபெறும் மேடை சுற்றுப்புறங்களைத் தீவிரமாகச் சோதனையிட்டனர். வெடிகுண்டு எதுவும் அகப்படவில்லை.

## காணவில்லை

சென்னை தேனும்பேட்டையைச் சேர்ந்த டி. கோவிந்தராஜின்மகன் ஜி. மனோகரன் காணவில்லை. வயது5-நிறம் மாநிறம் உயரம் 3அடி. அரைக் கால் டிராயரும், பச்சை நிறம். வெள்ளைநிறப் பூப்போட்ட சட்டையை அணிந்திருந்தான். அவனுல் சரியாகபேச முடியாது.

தகவல் அறிந்தோர் தொடர்புகொள்ள வேண்டிய முகவரி: டி. கோவிந்தராஜன் 54-2, ஆலயம்மன் கோவில் தெரு, வன்னிய தேனும்பேட்டை, சென்னை18.

# நவம்பர் முதல் தேதி மேலவை இடைத்தேர்தல்நடைபெறுகிறது

புதுடெல்லி அக் 12- தமிழக மேலவையில் ஏற்பட்டுள்ள காலியிடத்திற்கு நவம்பர் முதல் தேதியன்று தேர்தல் நடைபெறுகிறது. இதுபற்றி தேர்தல் கமிஷன் முடிவு செய்துள்ளது.

இந்த இடைத் தேர்தலுக்கான அறிவிப்பை தேர்தல் கமிஷன் இன்று அல்லது நாளை வெளியிடும்.

அமைச்சர் எஸ்.டி.எஸ். மேலவை உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு அதை ராஜினுமா செய்திருந்தார்.

இப்போது அந்தக் காலி இடத்திற்கு இடைத் தேர்தல் நடைபெறுகிறது.

இந்த இடைத்தேர்தலில் போட்டியிட விருப்புகிறவர்கள் வேட்புமனு தாக்கல் செய்யும் கடைசி தேதி அக்டோபர் 20

அக் 21-ம் தேதி வேட்பு மனு பரிசீலனை செய்யப்படும். அக். 23-ம் தேதி வரை வேட்பு மனுவை வாபஸ் பெறலாம்.

போட்டி இருந்தால் நவம்பர் முதல் தேதியன்று வாக்கெடுப்புநடைபெறும்.

சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் ஓட்டுப் போட்டு மேலவை உறுப்பினரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

# அண்ணா






## ஐ. நா. சபையில் ஒலித்த திருக்குறள்

ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச் சபையில் பேசிய வெளிவிவகார அமைச்சர் வாஜ்பாயி தனது பேச்சின் இறுதியில் திருக்குறளைக் குறிப்பிட்டார்.

அவர் பேசுகையில் "ஒரு நாடு எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு தென் இந்தியாவைச் சேர்ந்த மிகத் தொன்மைக் கவிஞரான திருவள்ளுவர் விளக்கம் கூறி இருக்கிறார் அவரது திருக்குறளில் 'கடும் பசியும், கூர நோயும், பகைவர்களும் இல்லாமல் இருப்பதே சிறந்தநாடு ஆகும்' என்றுகூறி இருக்கிறார்" என வாஜ்பாயி குறிப்பிட்டார்.

## சென்னை சட்டக் கல்லூரி: கழக மாணவர்களுக்கு

12-10-78 வியாழக்கிழமையன்று மாலை 5 மணியளவில் சென்னை சட்டக் கல்லூரி அனைத்திந்திய அண்ணா திராவிட மாணவர் முன்னேற்றக் கழக அமைப்புக் கூட்டம் மாநில மாணவர் பிரிவு அமைப்பாளர் ஆ. வெள்ளைச்சாமி எம். எல். ஏ. தலைமையிலும், மாணவர் அணிச்செயலாளர் அழகு திருநாவுக்கரசு முன்னிலையிலும், அரசினர் தோட்டத்திலுள்ள சட்டமன்ற உறுப்பினர் அலுவலகத்தில் நடைபெறுவதால் மாணவர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ள வேண்டுமென பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

கே. எம். சுப்பிரமணியம்,
சென்னை மாவட்ட கழக மாணவர் அமைப்பாளர்

## ★ கழகச் செய்திகள் ★

### தாம்பரம்

12-10-78 வியாழன் மாலை 6 மணிக்கு இரும்புலியூர் ரயில் கேட் எதிரில் நடக்கும் தந்தை பெரியார் - பேரறிஞர் அண்ணா விழாவில் வீ. சண்முகம் தலைமையில் பேசுவோர்: எஸ். எஸ். ஆர்., மதுரை வளர்மதி, எல்ல. ராசமாணிக்கம், புலவர் ஏ.சு. மணி, ஏ. செல்லமுத்து, மா. சு. மணி மற்றும் பலர்.

இரவு 9 மணிக்கு குலதெய்வம் ராஜகோபாலின் வில்லுப்பாட்டு நிகழ்ச்சி நடக்கும்.

### மயிலாப்பூர்

12- 10- 78 வியாழக்கிழமை மாலை 7 மணிக்கு நாகேஸ்வரபுரம் (சாயி பாபா கோயில் அருகில்) து. பக்கிரி தலைமையில் நடக்கும் முப்பெருவிழாவில் பேசுவோர்: அமைச்சர்கள் கே.ஏ.கே., ஆர். சவுந்தரராசன், மற்றும் கோவை அண்ணாநம்பி, ஜெ. பாலன், சந்திரா, கு. க. செல்வம், பி. எஸ். ஆனந்தன் மற்றும் பலர்.

காலை 8 மணியளவில் நடக்கும் கழகக்கொடியேற்று விழாவில் குடிசை மாற்றுவாரியத்தலைவர் பி. ராமபத்திரன் கலந்து கொண்டுகொடி யேற்று கிறார்.

### வேட்டமங்கலம்

13-10-78 வெள்ளிமாலை 6 மணிக்கு அண்ணா சதுக்கத்தில் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா விழா கொண்டாடப்படுகிறது. என். நாகையன் தலைமையில் குடந்தை எஸ். ஆர். ராதா எம்.எல்.ஏ., தம்பி சிவம், எம்.டி. ஜக்கிரியா, எம். அருணசபேசன். அ. கலையரசன், கோ. வி. வெங்கடேசன், எம். சண்முகம், கே. பெரியசாமி, எம். சம்சுதீன், கே.கே. மூர்த்தி, என். ரெத்தினம், வி. ராமதாஸ் ஜி. சுப்பிரமணியன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

### திண்டுக்கல்

13- 10- 78 வெள்ளி மாலை 6 மணிக்கு கோவிந்தாபுரத்தில் ஆர். சேகர் தலைமையில் பேசுவோர்: அடியார், சிவநாத்பாபு, தியாகராஜன் முத்து கோபால், முத்தையா, காமராஜ், அழகர், பெருமாள் மற்றும் பலர்

### திருத்துறைப்பூண்டி

13-10-78 வெள்ளிக்கிழமை காலை 11 மணிக்கு பிரகன் நாயகி திரையரங்கில் கே. குணாளன் தலைமையில் அமைச்சர் ஆர். எம். வீக்கு பாராட்டுக் கூட்டம் நடக்கிறது. பேசுவோர்: துரை, கோவிந்தராசன் எம். எல். ஏ. சு. தென்கோவன், எஸ். பாப்பையன், எஸ். ஜெயராமன், ப. ஜெயக்குமார், மன்னை ராஜன், த. உதயகுமார், சேவி. சு. பாலன், மா. கணேசன், வி. தமிழ்மணி மற்றும் பலர் பேசுகின்றனர்.

அமைச்சர் ஆர். எம். வீ. நன்றி கூறுகிறார்

### தேனாம்பேட்டை

13-10-78 வெள்ளி மாலை 7 மணிக்கு விஜயராகவாச்சாரி சாலை (ஆபட்ஸ்பரி எதிரில்) கோ. கண்ணன் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் ராகவானந்தம், டாக்டர் ஹண்டே எம்எல்சி ஜேப்பியார், வளர்மதி, சா. கோவிந்தசாமி, மு. மன்னலி, அன்பழகன், ரவிச்சந்திரன், ராஜேந்திரன் மற்றும் பலர்.

### அனகாபுத்தூர்

13-10-78 வெள்ளிமாலை 6.30 மணிக்கு சன்னதி தெருவில் எம். வி. குப்புசாமி தலைமையில் பேசுவோர்: வை. பெருமாள், எரியீட்டி ராஜகோபால், நடராசன், கஸ்தூரிபாலன் ராஜபாண்டியன், துரைசாமி, சண்முகம், ராமலிங்கம், சங்கர், ஜோதி, மணி, பஞ்சாட்சரம், துரை, செல்வம், மோகனவேலு மற்றும்பலர்.

### திண்டுக்கல்

14-10-78 மாலை 6-30 மணிக்கு திருச்சிரோடு காட்டாஸ்பத்திரி அருகே ஏ. டி. கருப்பையா தலைமையில் நடக்கும் கழகக் கூட்டத்தில் பேசுவோர்: வா. சிவநாத்பாபு, ஏ. வி. சந்திரன், எம். செல்லப்பா பி. எம். ஜெயராஜ், பி. தியாகராஜன், மா. பாண்டித்துரை, மணிமூத்து, கருப்பயன் மற்றும் பலர்.

### சூளைமேடு

15-10-78 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு பஜனை கோவில் தெரு (அண்ணா சிலை அருகில்) டி.டி. மூர்த்தி தலைமையில் பங்கேற்போர்: ஜி. கே. எஸ் - மீனா குழுவினர், மற்றும் கு. க. செல்வம், கோ. தண்டராமன், ஜெயராமன், சுப்பிரமணி,

### கன்னிகாபுரம்

15-10-78 அன்று ஞாயிறு காலை 10 மணிக்கு 46-வது வட்டம் கன்னிகாபுரத்தில் நடக்கும் தந்தை பெரியார் அண்ணா பிறந்தநாள் விழாவில் கழகக் கொடியை அமைச்சர் சவுந்தரபாண்டியன் ஏற்றுகிறார் இரா. தனபால் தலைமையில் இ. மதுசூதனன், பொ. சு. ஆரி எம். பி., ஜெகந்நாதன். ஆசீர்வாதம், வி. எஸ். மகேந்திரன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

### விருதுநகர்

15-10-78 ஞாயிறுமாலை 7 மணிக்கு பாரப்பட்டித் தெரு அண்ணாதிடலில் தங்கம் தலைமையில் பேசுவோர்: ஆலங்குடி சோமு ராசன், கே.கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் எம். எல். ஏ., சுந்தரராஜன் எம். எல். ஏ. மருது, யாகோப், ஜபருல்லாகான், தியாகராசன், ஜெயராஜ், இன்பரசன், மற்றும் பலர்.

### நெய்வேலி

15-10-78 ஞாயிறுமாலை 6 மணிக்கு புதுநகர் அண்ணா திடலில் கண்ணன் தலைமையில் பேசுவோர்: நாவலர், கரிகாலன், முகமது அனீபா நாராயணன், ராஜரத்தினம், குப்புசாமி, வாசுதேவன், மாடசாமி, பால்சாமி ராமமூர்த்தி மற்றும், பலர்.

## வளர்மதி சிவநாத்பாபு படுகாயம்: திமுக வெறிதாக்குதல்

திண்டுக்கல், அக். 12- மாநில மகளிர் பிரிவு அமைப்பாளர் வளர்மதி, திண்டுக்கல் நாடாளுமன்ற தொகுதி அமைப்பாளர் சிவநாத்பாபு இருவரையும் திமுக காலிகள் கொடுமையாகத் தாக்கினர்.

மாநில மகளிர் பிரிவு அமைப்பாளர்வளர்மதியும் திண்டுக்கல் நாடாளுமன்ற அமைப்பாளர் சிவநாத்பாபும், திண்டுக்கல்லை அடுத்த வண்ணம்பட்டியில் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசக் காரில் சென்று கொண்டிருந்தனர். அப்போது இந்ததாக்குதல் நடந்தது.